## <u>சுய விவரம்</u>

| | | |
|---|---|---|
| பெயர் | : | சி.பெருமாள் |
| பிறந்த தேதி | : | 20-07-1957 |
| இனம் | : | நாடார் |
| மதம் | : | இந்து |
| கல்வித்தகுதி | : | M.A.D.F.Tech., |
| தந்தை பெயர் | : | A.K.சின்னுநாடார் |
| தாயார் பெயர் | : | குழந்தையம்மாள் |
| முதலில் கழகத்தில் சேர்ந்த ஆண்டு | : | 1972 |
| கழகத்தில் வகித்த பொறுப்புகள்(ம) | : | 1972 அக்டோபர் - 17 எம்.ஜி.ஆர் கட்சி |

அ.இ.அ.தி.மு.க செய்த பணிகள் & சேவைகள் துவக்க நாள்.

1973-74-ல் இஸ்லாமிய கல்லூரி அ.இ.அ.தி.மு.க மாணவர் அணி துணை அமைப்பாளர்.

1973-ஆம் ஆண்டு பொது வாழ்வில் முதல் முறையாக சிறைக்குச் சென்றது. திருச்சி கிளைவ்விடுதி சம்பவத்தை முன்னிட்டு அ.இ.அ.தி.மு.க சார்பில் இரயில் மறியல் போராட்டம் நடத்தி திருச்சி கிளைவ் (ஆஸ்டல்) மாணவர்களுக்காக சிறைக்குச் சென்றது.

1974 முதல் 2002 வரை தலைமைக்கழக பேச்சாளராக பணியாற்றுதல் மற்றும் மறைந்த அமைச்சர் திரு.சவுந்தரராஜன், அன்றைய ADMK, துணை பொதுச் செயலாளர் அன்றைய அ.இ.அ.தி.மு.க சட்டமன்ற எதிர்க்கட்சித்லைவர் H.V.ஹண்டே அவர்களின் முன்னிலையில் மேடையில் 1974-ஆம்



ஆண்டு டிசம்பர் மாதம் தலைமைக் கழக பேச்சாளராக அறிக்கப்படுதல்.

1975-ஆம் ஆண்டு விலைவாசி உயர்வு போராட்டத்தில் அ.இ.அ.தி.மு.க சார்பில் கலந்துக் கொண்டு சிறைக்குச் சென்றது.

1977-ல் பாராளுமன்றத் தேர்தலில் கிருஷ்ணகிரி அ.இ.அ.தி.மு.க வேட்பாளர் Dr.P.V.பெரியசாமி அவர்களுக்காக பர்கூர் தொகுதி தேர்தல் பிரச்சார குழு தலைவராக பணிசெய்தேன். 1977-ஆம் ஆண்டு சட்ட சபை தேர்தலில திரு.எச்.ஜி.ஆறுமுகம் அவர்களுக்கு பருகூர் தொகுதி தேர்தலில் பிரச்சார கமிட்டி தலைவராகத பணியாற்றினேன்.

1979-ஆம் ஆண்டு கோவை கிருஷ்ணம்மாள் கல்யாண மண்டபத்தில் நடைபெற்ற கட்சியின் பொதுக் குழு கூட்டத்தில் சிறப்பு



அழைப்பாளராக கலந்துக் கொண்டேன். 1980-81-ல் சென்னை அடையாரில் உள்ள (தற்போது தரமணி) தமிழ்நாடு அரசு திரைப்படக் கல்லூரியில் நடிப்புத் துறையில் சேர்ந்து பயின்றேன்.

1982-ஆம் ஆண்டு இயக்குனர் R.C.சக்தி இயக்கத்தில் "ஸ்பரிசம்" "உண்மைகள்" படத்தில் முதன் முறையாக நடித்தது.

1983-ல் R,D.பாஸ்கர் தயாரிப்பில் கங்கை அமரன் இயக்கிய "கொக்கரக்கோ" படத்தில் முக்கிய கதாபாத்திரத்தில் நடித்தேன்.

1983 முதல் 1988 வரை தருமபுரி மாவட்ட மாணவரணி துணைச் செயலாளராக

நியமிக்கப்பட்டு, ஐந்து ஆண்டுகளும் மாணவர்களின் நலன் கருதி, வருங்கால மாணவர்களுக்குத் தேவையான நலத்திட்டங்கள் பலவற்றை கேட்டும், போராடியும் பெற்றுத்தந்து மாணவர்களுக்கு முன் மாதிரியாக விளங்கினேன்.

1983-ஆம் ஆண்டு தமிழில் வெளிவந்த “மணல் கயிறு” திரைப்படத்தை தெலுங்கில் தயாரிப்பாளர் நடிகர் சலம் அவர்களுக்காகத் தெலுங்கில் மொழிப்பெயர்த்துத் கொடுத்தேன். அத்திரைப்படம் “பெண்லி சேசி சூபிஸ்த்தாமு” என்ற தலைப்பில் தெலுங்கில் வெளியானது.

1983-ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஈழத் தமிழக படுகொலையைக் கண்டித்து எம்.ஜி.ஆர் அறிவிப்பிற்கினங்க தருமபுரி மாவட்டம் ஆம்பள்ளியிலிருந்து சுமார் 500 பேர்களை ஊர்வலமாக அழைத்துச் சென்று அன்றைய வட ஆற்காடு மாவட்ட திருப்பத்தூர் தாலுகா கந்திலியில் உள்ள காவல் நிலையம் முன்பு அன்றைய இலங்கை அதிபர் ஜெயவர்த்தனா அவர்களின் கொடும்பாவி பொம்மையை எரித்து போராட்டம் நடத்தினேன் ஓராண்டுக் காலம் இலங்கை தமிழர்களுக்காகக் கருப்புச் சட்டை அணிந்திருந்தேன்.

1984-ல் அ.இ.அ.தி.மு.க பொதுச் செயலாளர் தமிழ்நாடு முதலமைச்சர் புரட்சித் தலைவர் M.G.R. அவர்களால் அ.இ.அ.தி.மு.க-வினுடைய தருமபுரி மாவட்ட மாணவர் அணி துணைச் செயலாளராக அறிவிக்கப்பட்டேன். மாணவர்களுக்காக ஒகேனேக்கலில் பயிற்சி முகாம் நடத்தியது.

1984-ஆம் ஆண்டு நடைபெற்ற தமிழ்நாடு சட்டசபை பொது தேர்தலில் பர்கூர் தொகுதியில் அ.இ.அ.தி.முக சார்பில்



போட்டியிட வாய்ப்புக் கேட்டு முதன் முறையாக வேட்புமனு தாக்கல் செய்தது.



1984-ம் ஆண்டு சென்னை கலைவாணர் அரங்கில் நடைப்பெற்ற "இந்தி எதிர்ப்பு" மாநாட்டில் கலந்துக்கொண்டு பேசி அனைவருடைய பாராட்டுதலையும் பெற்றேன். இந்நிகழ்வுக்கு அன்றைய தமிழக வேளாண்துறை அமைச்சர் டாக்டர்.காளிமுத்து அவர்கள் தலைமையேற்றார். அன்றையத் தமிழக முதலமைச்சர் புரட்சித் தலைவர் எம்.ஜி.ஆர் அவர்கள் சிறப்புரையாற்றினார்.

1985-ல் சென்னை தொலைக்காட்சி-யில் (Doordharsan-ல்) உண்மை, உழைப்பு, உயர்வு என்னும் நாடகத்திலும் (தயாரிப்பு தஞ்சைவானன்) அதே ஆண்டு ஒரு மணி நேர படமான "திசை மாறும் ஜீவ நதிகள்" என்ற தொலைக்காட்சி நாடகத்தில் கதாநாயகனாக நடித்தேன். அதன் பிறகு இயக்குநர் K.பாலசந்தர் இயக்கத்தில் வெளிவந்த "கல்யாண அகதிகள்" என்ற திரைப்படத்தில் முக்கிய வேடத்தில் நடித்தேன்.

1985-ஆம் ஆண்டு முதல் 1987-ஆம் ஆண்டு வரை சென்னை மேற்கு தாம்பரத்தில் உள்ள கிறிஸ்துவ கல்லூரியில் நடிப்பு துறையில் கௌரவ விரையுரையாளராக பணியாற்றினேன்.

1986-ல் விருதுநகர் மாவட்டம் அருப்புக் கோட்டைப் தொகுதியில் நடைப்பெற்ற சட்டமன்ற இடைத் தேர்தலில் மாணவர் அணி சார்பில் அத்தொகுதியில் உள்ள வீர சோழன் நகரத்தில் தேர்தல் பணிகள் ஆற்றினேன்.

1987-ல் இயக்குநர் இராம திலகராஜன் இயக்கத்தில் வெளியான "நாடு அதை நாடு" என்றத் திரைப்படத்தில் ராமராஜனுடன் நடித்தேன்.

1988-ல் புரட்சி தலைவர் M.G.R. மறைவுக்குப் பின்பு புரட்சித் தலைவி J.ஜெயலலிதா அம்மா அவர்கள் அணியில் பணி ஆற்றி 1988-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஒன்றுபட்ட தர்மபுரி மாவட்ட மாணவர்அணி செயலளராக அம்மா அவர்களால் அறிவிக்கப்பட்டேன்.

1988-ஆம் ஆண்டு ராஜீவ் காந்தி அவர்களது தலைமையிலான காங்கிரஸ் மத்திய அரசை வலியுறுத்தி ஐந்து அம்ச கோரிக்கைகளை நிறைவேற்ற கோரி கழக மாணவரணி சார்பில் குமரி முதல் சென்னை வரை ஜெயலலிதா அம்மையார் அவர்களால் அறிவிக்கப்பட்டு பாதயாத்திரை சென்றேன். 1988-ம் ஆண்டு அக்டோபர் 2-ம் தேதி கன்னியாகுமாரியில் தொடங்கி நெல்லை, மதுரை, திருச்சி, திண்டிவனம், தாம்பரம் வழியாக சென்னைக்கு சுமார் 1100 கி.மீ நடந்து வந்து சேர்ந்தோம். இதற்கு அன்றைய புரட்சித் தலைவி அ.இ.அ.தி.முக ஜெ.அணி மாநில மாணவ செயலாளர் கவிஞர் காமராஜர் தலைமை வகித்தார்.

பாதயாத்திரை குழு :

- C.பெருமாள் - தருமபுரி மாவட்ட மாணவர் அணி செயலாளர்.
- ராஜரத்தினம் - திருச்சி மாவட்ட மாணவர் அணி செயலாளர்.
- புரட்சிதாசன் - திண்டுக்கல் மாவட்ட மாணவர் அணி செயலாளர்.
- நரசிங்கன் - குமரி மாவட்ட மாணவர் அணி செயலாளர்.
- ஐசதை இந்தர், மணி - சென்னை



மாணவர் அணி இணைச் செயலாளர் ஆகியோர் பாத யாத்திரை குழுவினர்.

7

1989-ஆம் ஆண்டு மார்ச்-25-ம் நாள் சட்டசபை சம்பவத்தை முன்னிட்டு நடந்த கருப்புக்கொடி போராட்டத்தில் கலந்துக் கொண்டு சிறைச் சென்றேன். மேலும், 1996-ல் நடைப்பெற்ற புரட்சித்தலைவி அம்மா அவர்கள் கைது செய்யப்பட்டதை எதிர்த்து நடந்த போராட்டத்தில் சிறைக்குச் சென்றேன்.

1989-ல் திரைப்பட இயக்குநர் திரு.இராம.திலகராஜ் இயக்கத்தில் வெளிவந்த “நாடு அதை நாடு” என்ற படத்தில் நடித்தேன் இதில் கதாநாயகனாக நடித்த இராமராஜனுடன் இணைந்து நடிக்க வாய்ப்பு கிடைத்தது. அதே ஆண்டு இயக்குநர் மனோஜ்குமார் அவர்கள் இயக்கத்தில் “நல்ல நேரம்” படத்தில் நடிகராகவும், தயாரிப்பில் உதவியாளராகவும் பணியாற்றினேன். மேலும், இயக்குநர் சந்திரநாத் இயக்கத்தில் வெளிவந்த இதய வாசல் படத்தில் கவுண்டமணியின் மருமகனாக நடித்தேன்.

1991-ல் சட்டமன்றத் தேர்தலில் அ.இ.அ.தி.முக சார்பில் பர்கூர் தொகுதியில் போட்டியிட வாய்ப்புக்கேட்டேன்.

1994-ல் தமிழக அரசின் சேலம் மண்டல பனை பொருள் வளர்ச்சி வாரிய மண்டல இயக்குநராகப் புரட்சி தலைவி அம்மா அவர்களால் நியமிக்கப்பட்டேன்.

1995-ல் ஜனவரி -11-ம் தேதி தமிழக அரசு பனை பொருள் வளர்ச்சி வாரியத்தின் துணைத் தலைவராகவும், புரட்சி தலைவி அம்மா அவர்களால் தேர்வு செய்யப்பட்டேன். அந்த வாரியத்தின் நிலையான நிதிக்குழுவின் தலைவராகவும் தமிழக அரசின் மதுவிலக்கு துறையில் உறுப்பினர் ஆலோசகராகவும் அன்றைய முதலமைச்சர் செல்வி.ஜெ.ஜெயலலிதா அவர்களால்



நியமிக்கப்பட்டு பணியாற்றினேன்.

1997-2000 வரை தருமபுரி மாவட்டம் வடக்கு, தெற்கு என பிரிக்கப்பட்டு இருந்தது, அச்சமயம்



வடக்கு மாவட்ட மாணவர் அணி செயலாளராகப் பணியாற்றினேன். கழக மாநில பொதுக் குழு உறுப்பினராக நியமிக்கப்பட்டேன்.

1998-ல் கழக திருச்சி மாநாட்டிற்கு கழக மாணவர் அணி சார்பில் பங்கேற்று சிறப்பான முறையில் பணியாற்றினேன். பாரத குடியரசுத் தலைவரால் பரிசுப் பெற்ற சேவை ஆட்டம் கலைக்குழுவினர் (ம) கற்றைக்கோல் விளையாட்டுக் குழுவினர்களை அழைத்துச் சென்று நிகழ்ச்சி நடத்தினேன்.

2000-ஆம் ஆண்டு தருமபுரி மாவட்டம் இரண்டாக பிரிக்கப்பட்டது. அப்பொழுது மாணவர் அணி செயலாளராகப் பணியாற்றிய என்னை பதவி உயர்த்தி புரட்சித் தலைவர் பேரவை மாவட்ட செயலாளராகப் , புரட்சி தலைவி அம்மா அவர்கள் அறிவித்தார்.

2002-ஆம் ஆண்டு ஏப்ரல் -2-ம் நாள் தமிழகத்திலிருந்து அ.இ.அ.தி.முக சார்பில் பாராளுமன்ற மாநிலங்களவை உறுப்பினராக தமிழகத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டேன். அதன் மூலம் பாராளுமன்ற நிலைக்குழுவின் உணவு வழங்கல் (ம) பொது விநியோகத்துறையில் தேசிய உறுப்பினராக நியமிக்கப்பட்டேன்.

2004-ம் ஆண்டு டிசம்பர் இறுதியில் தமிழகத்தை தாக்கிய சுனாமி வெள்ள நிவாரண பணிக்காக முதல் ஒரு வாரம் திருநெல்வேலி மாவட்டம் வள்ளியூரிலும் பின்பு தொடர்ச்சியாக இரண்டாம் மாதம் வாரம் பூம்புகார் கடற்கரை நகரத்திலும், தொடர்ந்து பாராளுமன்ற ராஜ்யசபா துணைத் தலைவர் திரு.ரகுமான் அவர்களை தலைவராகக் கொண்ட எம்.பி.லார்டு கமிட்டியில் உறுப்பினராகப் பொறுப்பேற்று அந்தமான், நிக்கோபர்,



கார்நிக்கோபர், பகுதியில் சுனாமி நிவாரணப் பணியை மேற்கொண்டேன்.



2005-முதல் பாராளுமன்ற நிலைக் குழுவான பெட்ரோலியம், நேச்சுரல் கேஸ் உறுப்பினராகவும், உணவு பதப்படுத்துதல் குழு உறுப்பினராகவும் பணியாற்றினேன்.

2005-ஆம் ஆண்டு கிருட்டிணகிரியில் பாரத் கல்வி அறக்கட்டளையை நிறுவி அதன் தலைவராக பொறுப்பேற்று, கிருஷ்ணா கல்வியல் கல்லூரி, கிருஷ்ணா ஆசிரியர் பயிற்சி பள்ளி ஆகியவைகளை இன்று வரை சிறப்பாக வழிநடத்தி வருகிறேன்.

2007-ஆம் ஆண்டு சட்ட நகல் எரிப்பு போராட்டத்தில் கலந்துக் கொண்டதற்காக வேலூர் மத்திய சிறைச்சாலையில் அடைக்கப்பட்டேன்.

2012-ம் ஆண்டு முதல் கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரியை நிறுவி இளநிலை, முதுநிலை, ஆராய்ச்சி வகுப்பு நடத்தப்பட்டும், கல்விச் சேவையில் ஆதரவற்ற ஏழை எளிய மக்களுக்கு மற்றும் கொரனாவால் பாதிக்கப்பட்ட மக்களுக்கு நிவாரணப் பொருள் வழங்கியும் சேவையாற்றி வருகிறேன்.

- 2012-2013 ஆம் ஆண்டு முதல் (பெரியார் பல்கலைக் கழக இணைவுப் பெற்றது) கிருஷ்ணா கலை மற்றும் அறிவியல் கல்லூரியில் பன்னிரண்டு இளங்கலை, எட்டு முதுகலைப் படிப்பு, மூன்று ஆராய்ச்சி படிப்பு ஆகியவற்றை சிறப்பாக நடத்தி வருகிறேன். ஒப்பிட்டு அடிப்படையில் தமிழகத்திலேயே மிகக் குறைந்த கட்டணம் பெறப்படும் கல்வி

  நிறுவனமாகத் திகழ்கிறது.



- கொரொனா பேரிடர் காலகட்டத்தில் இந்த கல்வி நிறுவத்தில் பணிபுரியும் எந்த ஒரு ஆசிரியரையும், எந்த ஒரு பணியாளர்களையும் பணி நிறுத்தம் செய்யப்படவில்லை. அதேபோல் எந்த



ஒரு மாணவ, மாணவியர்களையே கல்விக் கட்டணம் செலுத்த

நிர்பந்திக்கவில்லை.

- கொரோனா பேரிடர் காலத்தில் சமுதாயத்தில் கொரோனாவால் பாதிக்கப்பட்ட மாணவர்களுக்கு, பெற்றோரை இழந்த மாணவர்களுக்கு எங்கள் கல்வி நிறுவனத்தின் மூலம்

இலவசமாக கல்வித்தரப்பட்டது.

- திறமையான தகுதி வாய்ந்த மாணவ, மாணவிகளைத் துறை மூலமாக அறிந்து அவர்கள் முயற்சியின் விருப்பத்திற்கு ஏற்ப எமது கல்லூரியில் ஊக்கமும், ஆக்கமும் பொருளாதார உதவியும் செய்யப்பட்டது இவை இன்னும் தொடர்கிறது.

பல மாணவர்கள் விளையாட்டுத் துறையில் ஊக்கப்படுத்தி மாநில அளவில் தேர்ச்சிப் பெற வைத்து அவர்களுக்கு நிர்வாகத்தின் செலவில் அரசுப் பணியும் பெற்றுத் தரப்பட்டது.



நடைப்பெற்ற ஊள்ளாட்சி தேர்தலில் கிருஷ்ணகிரி மாவட்ட ஊராட்சிக் குழு உறுப்பினராக வெற்றிப் பெற்று தேர்வாகினேன். மேலும் தொடர்ந்து கிருஷ்ணகிரி மாவட்ட திட்டக்குழு உறுப்பினராகவும் தமிழக அரசால் தேர்ந்தெடுக்கப்பட்டு 5 ஆண்டுகள் பணியாற்றினேன்.





விளையாட்டுத் துறையில் மாணவ, மாணவிகளை ஈடுபடுத்தி அவர்களுக்கு அரசு வேலை பெற்றுத் தந்துள்ளேன். இதற்காக **குளோபல் ஆராய்ச்சி மற்றும் பல்கலைக் கழகம் மூலமாக** சிறந்த கல்வியாளருக்கானச் சாதனை விருதை வழங்கி கௌரவித்தனர்.



மேலும் 2016 முதல் இன்று வரை பெரியார் பல்கலைக் கழகத்தின் சுய நிதி கல்லூரிகளின் PASAM என்ற அமைப்பில் துணைத் தலைவராகத் தேர்தெடுக்கப்பட்டுப் பணியாற்றி வருகிறேன்.

2019-ஆம் ஆண்டு முதல் 2021 வரை கொரோனா பேரிடர் காலத்தில் என்னை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டு துப்புறவு பணியாளர்களுக்கு உடை வழங்குதல், ஆட்டோ ஒட்டுநர்களுக்கு இலவச உடை வழங்குதல், சமுதாயத்தில் பாதிக்கப்பட்ட ஏழை எளிய மக்களுக்குத் இலவச உடை, மளிகை பொருட்கள், அரிசி, சர்க்கரை, கோதுமை, உப்பு, காய்கறிகள், பழங்கள் முதலியவற்றை மாவட்டம் முழுவதும் தொடர்ச்சியாக வழங்கினேன்.

தமிழகத்தில் அவ்வப்போது ஏற்பட்ட கஜா புயல், தானே புயல், போன்ற இயற்கை பேரிடர் காலங்களில் பாதிக்கப்பட்ட மக்களுக்கு தேவையான நிவாரணம் வழங்கினேன்.

இப்படிக்கு தங்கள்

உண்மையுள்ள



பட்டமளிப்பு விழா பெரியார் பல்கலைக்



கழக துணை வேந்தர்,
பேராசிரியர்.ஜெ.ஜெகநாதன் அவர்கள்
மாணவர்களுக்குப் பட்டங்கள்
வழங்கினர்



# சி.பெருமாள்,M.A.,D.F.Tech.,Ex.M.P.,

- முன்னாள் பாராளுமன்ற ராஜ்யசபா உறுப்பினர்
- முன்னாள் தமிழ்நாடு அரசு பனைபொருள் வளர்ச்சி வாரிய துணைத் தலைவர்
- முன்னாள் கிருஷ்ணகிரி மாவட்ட ஊராட்சிக் குழு (ம) திட்டகுழு உறுப்பினர்

அனைத்து இந்தய அண்ணா திராவிட முன்னேற்றக் கழக

கிருஷ்ணகிரி மேற்கு மாவட்ட கழக அவைத் தலைவர்

**நிறுவனர் & தாளாளர் : -**

1. கிருஷ்ணா கலை அறிவியல் கல்லூரி,
2. கிருஷ்ணா கல்வியல் கல்லூரி,
3. கிருஷ்ணா ஆசிரியர் பயிற்சி நிறுவனம்,

